# சிங்கப்பூர் புஷ்யோற்சவவைபவம்

இது

இராமநாதபுரம் ஜில்லா, திருப்புத்தூர்த்தாலுகா

அளகாபுரி

அரு. அள. அளகப்பசெட்டியார்

வேண்டுகோளின்படி

யாழ்ப்பாணத்து-நல்லூர்

உபயவேதாகமபண்டிதர்.

வே. கநகசபாபதிஐயர் செய்தது.

SINGAPORE:
THE COLONIAL PRESS, PRINTERS.
1915.

☞ "புஷ்யோற்சவவைபவம்,, என்னும் இச்சிறு புத்தகம் கல்வி அறிவில் மிக்கவித்துவான் களுக்குமாத்திரமன்றித் தமிழ்வசனங்களை வாசித்தறியத்தக்க சாதாரண ஜனங்களும் படித்தறிய வேண்டுமென்று விரும்பிமிக இலேசான பாஷையிலெழுதப் பட்டிருக்கின் றது. பண்டிதர்கள் இதிலுள்ள பிழைகளை நோக்காது க்ஷமித்து விஷயங்களை நோக்கு ம்படி கேட்கின்றேன்.

ஆ. ன்.

உ

குஹமயம்.

# சிங்கப்பூர் புஷ்பயோற்சவவைபவம்

சத்திக்குந் தாரக்கிரெருகுட்டிக்கும்
பாலவித்துத்த கைசால்மாரன்
பத்திக்கு மழகனருட் பாவுக்குங்
கோலவித்த பழையோனின்ற
நத்திக்கும் பிடிமடியாரிடாரகற்றியல்
லவர்க்கு நவிற்றுஞ்சிங்கைச்
சித்திக்குஞ்சரத்தினி ருபதத்தையுளச்
சிரந்தை யொடுஞ் சிந்தைசெய்வாம்.

மஹா மேன்மை பொருந்திய (Straits Settlements) தொடுவாய் இராச்சியங்களுக்கு மதாணிபோல் விளங்கும் சிங்கைமாநகரின்கண் வாழ்ந்திருக்கும் நகரத்தார்கள் இங்கு இயற்று

வித்தஅதியுன்னத அலங்காரமான திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும், எல்லாவறிவும் எல்லா முதன்மையும் எல்லாவநுக்கிரகமு முடைய அகண்டகாரஙித்த வியாபகசச்சிதாநந்த சுயஞ்சோதிப்பிழம்பாகியசுப்பிரமணியக்கடவுள், ஆநந்த வருடைதமீ ௰௯ உ வெள்ளிக்கிழமை காலையில் திருப்பள்ளியெழுச்சிகண்டருளி "சோதியுலா மாணிக்கத்தூணிரையின் மீது பவளத்தின் போதிகைமேற் பச்சைமணித்தூலந் திவளுற்றபொற்பலகைசேர்த்துத்-தவள-மணிக்கொடுங்கைவைத்துவளர்பளிங்கின்பித்தி-துணித்தமலர்மாலை தூக்கிப் பிணித்ததிரு-மண்டபத்தில் வந்து மடங்கற்ற விசேறி விண்டலத்திற் சூரியன்போல்வீற்றிருந்து-மாமஞ்சனெல்லி வருமாளைந்தையமுதமேமந்தரு நெய்யிளவெந்நீர் தேமுந்து-வில்வநீர் கர்ப்புரம் பால் வெண்டயிர்செந்தேன் கரும்பின் செல்வநீர் பல்கனியின் றீஞசாறு-நல்லிளநீர்-சந்தன மென்பனிநீர் சங்கப்புனன்முதலா வந்தன கொண்டு திருமஞ்சனமாடி" சந்திரனை நாற்றுச் சமைத்தாற் போன்றமெல்லிய திருவொற்றுடையாற்றிருமேனியிரம்போக்கி, பால சூரியன் மேல் மேகம் படிந்தாற்போலவும், தமது வாகனமாகிய மயிலின்நீலச்சாயைபாந்ததுபோலவும், வண்டினங்கள் எம்பெருமான் றிருமேனியைப் பூவெ

ன்றெண்ணி மொய்த்தன போலவும், தாம்செ
வ்வேளாய் நின்றதிறத்தை நீக்கியிப்போமை வே
ளாய்நின்ற மாட்சிபோலவும், திருமேனி யெங்
கும் புழுகுகமழ்ந் தொழுகப்பூசி, கடிசூத்திரத்
திற்கௌபீனஞ்சாத்தி, பாம்பின்மெலியுரியன்ன
விலைமதித்தற்கரிய பீதாம்பரத்தை யிடையிற்
சேர்த்தி, மும்மூர்த்திகட்குந்தாமே குருவென்ப
தனைக் காட்டுதற்குக்குறியிட்டது போல்மார்பில்
முப்புரிநூல்அணிந்திட்டு. இருகோட்டொரு கை
ப்பொரு பூதரமுரித் தேகாசமிட்டபுராந் தகர்க்
குப் புத்திரராதலினவர் போலே காசந்தோண்
மே லிசைவித்து, நவக்கிரகங்களுந் தன்னிடத்
தடைக்கலம் புகுந்தாற் போல் நவமணிகளிழை
த்த திருமுடியைச்சிரசிலணிந்து, திருச்செவிக
ளில் மகரக்குழைகள்பூட்டி, தாம் சிவபெருமா
னின் வேறல்லரென்பதனை யறிவுறுத்தத்தமக்
கும் நெற்றியில் அக்கினிக்கண் ணுண்டென் பத
னைக்காட்டுதல் போலச் செந்திலதமிந்துநுதலி
ற்றீட்டி, தமநுவிசுவரூபத்தில் அக்கினிதேவன்
கண்டத்திலமர்ந்ததைப்போல் மாணிக்கமாலை
கழுத்திலணிந்து, திருத்தோள்களிற் கேயூரங்க
ளும்; திருக்கரங்களில் மணிக்காப்புகளுஞ் சே
ர்த்தி, உமாதேவியார் பொன்வள்ளத்திற் கறந்
தூட்டியபால் மார்பில் வழிந்தவாறுபோல் முத்

துமாலைகள் பூண்டு, சூரியர்கள் ஒருவர்பின்னொருவர் சோபானமுறையாக விருந்தாற்போலப் பலவகை ரத்நப்பதக்கங்கள்அணிந்து, அவற்றின் கிழ்க்கடப்பமாலை முதலிய மாலைகளைச்சூடி, கச்சிறுக்கிக்குற்றுடைவாள்செருகி, பட்டுடைக்குமேலுதரபந்தனமுங்கட்டி, வலதுகணைக்காலில் வயங்குகழல் வீரஞ்சொலுவது போலாரப்பத்தொடுத்து, நான்குவேதங்களும் வந்து துதிப்பதுபோலப் பாதங்களில்தண்டை, சதங்கை, சங்கிலி, நூபுரமிவற்றைப்பூட்டி, ஓம் என்னும் பிரணவப்பொருள்தாமே என்பதனைக்காட்டுதல் போலத் திருவாசிகைசாத்தி, ஆறுசுவையமுதம். தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கற்பூரம், சுண்ணம், அடைக்காயிவைகுமாரதந்திரமந்திர பூர்வமாகவேற்றருணித்தாபதீப கர்ப்பூரா திதிபாராதனை கொண்டு, சாந்தோக்யோபநிஷத்து முதலாவதுப்ர பாடகத்து ஆறுவது கண்டத்திலும், சிவரகசிய கண்டம் உ௬ம் அத்தியாயத்திலுங் கூறியபடி சூரியனுள்ளேயிருப்பவர் தாமென்பதனைக் காட்டுதல் போல் பரிதிபோலொளிர் நிலைக்கண்ணாடிபார்த்து, நகரத்தார்களியற்றுவித்துச்சமர்ப்பித்த இரசிதாதத்தின் மேலாரோகணித்துத் திருவுலாப் போதற்குச் சிங்காசனத்தினின்றுமிறங்கியருளினர்.

அப்பொழுது பிராமணர்கள் வேதகோஷஞ் செய்தார்கள். ஓதுவார்கள் தேவாரதிருவாசகாதி அருட்பாக்களோதினார்கள். அவருட்சிலர்திருப்புகழ்படித்தார்கள். சுப்பிரமணிய நாமசங்கீர்த்தனஞ்செய்வோர் பக்கவாத்தியங்களோடு தம்புருமீட்டிச் சங்கீத வெல்லச் சாறூட்டினார்கள். இடை இடையே அவர்கள் நம: பார்வதீ பதயே என்னும்போது ஹர ஹர மஹாதேவாஎன்றும், வல்லீகாந்தஸ்மரணே என்னும்போது ஜய ஜய ஸுப்ரம்ஹண்யோ ஓ ஓ என்றுஞ் சொல்லும் பேரோசையெங்குந் தழைத்தோங்கிற்று. அகில் சாம்பிராணி இவற்றின் நறுமணத்தூமம் சரற்காலமுகிற் றூமம் போலெங்குமூடிற்று. அடியார்கள் மலர்மழை பொழிந்தார்கள். மயிற்சின்னம் வைத்த வெள்ளிக் கட்டியத்தடி தாங்குவோர் "குமாரஸ்வாமிப்ருதாவளி,,களைச்சொன்னார்கள். பூர்ணசந்திரன் தனக்குள்ள தேய்தல்வளர்தல், க்ஷயரோகம், குருவில்லைப்பிழைத்தபாபம், இராகுவுக்கஞ்சுதல். களங்கம் முதலிய குற்றங்களை நீக்கக்கருதிச்சர் வாபீஷ்டவரதராகிய குஹப்பெருமானின்றிரு முடிமேல் நிழலைச்செய்தலாகிய தொண்டுபுரிவதுபோல வெண்குடைகளைச் சிலர் பிடித்தார்கள். கங்கைதன் புத்திரனின் பேரழகைக் கண்டாநந்தித்து அவர்திருமேனியைத்

தை வரச்சமீபித்தசைந்து வருதல் போற்சாமரைகளைச்சிலர்வீசினார்கள். சர்ப்பங்கள்படங்களை விரித்துக்கடவுளினிருமருங்கினும் நின்று "சுவாமீ! தேவரீர் வேண்டுவார் வேண்டுவதை யீயும்பரம கிருபாலுமூர்த்தியல்லவா? தேவரீருடைய பிதாவாகிய சிவபெருமான் அடியேங்களைக்காதணி, மார்பணி, கழலணி முதலியவணிகளாக வணிந்திருக்கின்றார்;மாதாவாகியஉமாதேவியார் சிறுவிரன் மோதிரமாக வணிந்திருக்கின்றார்; முன்னோனாகிய விநாயகக்கடவுள் யக்ஞோபவீதமாகவணிந்திருக்கின்றார்; மாதுலராகிய விஷ்ணுமூர்த்தி சயனமாகக் கொண்டிருக்கின்றார் ஆதலால் ஸர்வதேவதாஸ்வாமியாகிய தேவரீரும் அடியேங்களைத் தேவரீருடைய திருமேனிசம்பந்தமாக்கும் பெரும்பேற்றைத் தந்தருளவேண்டுமென்று வணங்கி யசைந்தாடினாற்போல ஆலவட்டங்களைச்சிலர் அசைத்தார்கள். மாணிக்கமலைபோன்றதும், செந்நிறங்கொழீ இயகிஞ்சுகச்சூட்டினையும், ஆழிமாலயனுவணமு மன்னமு மழியா ஆழிநாயகனார்தி யினைலிகொலென்றுட்க வார்க்கு மியல்பினையுமுடைய கோழிக்கொடிகளைச்சிலர் பிடித்தார்கள். தாள, மத்தள, வீணை.வேணு, காஹளபேரி, சங்க, சின்னாதி பலவாத்தியங்கள் முழங்கின. திருச்சின்னங்கள் "மூவர்கண்முதல்

வன்வந்தான், முக்கணன் குமரன்வந்தான். மேவலர் மடகங்ல் வந்தான், வேற்படை வீரன்வந்தான்,எவருந்தெரிதறேற்று திருந்திடுமொருவன் வந்தான், தேவர்கள்தேவன்வந்தான்,தானவரை முன்னந்தடிந்த முருகோன்வந்தான்,வானவரைக்காத்திடுஞ் சீமான்வந்தான், வேலாயுதன் வந்தான், வென்றிக்கொடிபடைத்த காலாயுதத் திருக்கையான்வந்தான். வந்தாரைவாழ்விக்கும் வள்ளற்குகன்வந்தான், மந்தாகினிக்கு மகன்வந்தான் செச்சைத் தொடைபுனைந்த செவ்வேளிதோவந்தான், பச்சைமயிலேறும்பரன் வந்தான், வந்தானென்று" ஒலித்தன. நகரத்தார்களும் பிறரும்,சரவணபவ,சரவணபவஎன்றுசொல்லும்பேரொலி எங்குந்தழைத்தோங்கிற்று. எள்ளிடவிடமின் றென்னும்படி நா நா சாதியாளர்களும் நிறைந்தார்கள். இவ்வாறுகிய பலவைபவங்கள் நிகழக்குமாரக்கடவுள் திருத்தேர்மீது ஆரோகணித்தருளினர்.

அத்தேரானது வெள்ளியாற்செய்யப்பட்டதாதலிற் கைலாசமலேபோல்விளங்கிற்று; அதன் சிகரம்பொன்னுற் செய்யப்பட்டதாதலிற் பாற்கடன் மத்தியினின்றுமெழுந்த அமுதம் பூரித்த பொற்குடம் போற்றுலங்கிற்று; சாமரைகளே

ந்தியபெண்பாவைகள் அரம்பைமுதலிய அப்ஸர ஸ்திரிகள் போலிலங்கின; சூழ்ந்துபறந்தபாவனை யாக எட்டுக்கந்தர்வப்பாவைகள் மின்சாரவிளக் குகள் எந்திரிற்பது எவர்கண்களையுங்கவர்ந்தன, அத்தேரிற்கட்டிய நான்கு குதிரைகள் இருக்கு முதலியவேதங்கள் போற்றிகழ்ந்தன; தேர்ப்பா கனிருக்கும் ஸ்தானத்தில்பிரமதேவரிருந்து கடி வாளமுஞ்சவுக்கும் பிடித்துப் பாகனையமர்ந்து தேரோட்டும்பாவனை, அப்பிரமதேவர் முன்சிவ பெருமானுக்கும்; வீரபத்திரக்கடவுளுக்கும் தே ர்ப்பாகனுகவிருந்ததுபோல இப்போது குமார க்கடவுளுக்கு மிருக்கவிரும்பிவந்தது போலிருந் தது. அதன்பின் குமாரக்கடவுள் கர்பூரதீபாரா தனை ஏற்றுத்தேரிற்றாக்கியமணிகள் கணகணத் தொனிசெய்ய வீதியிற்றிருவுலாப் போந்து சிப் பாயிலயினிலுள்ள சித்திவிநாயகர் ஆலத்திற் கெழுந்தருளித்தேர்மேனின்று நீங்கி மாமணி மண்டபத்திலுள்ளமடங்கலேறுதாங்குதவிசின் மேல் வீற்றிருந்தருளினர். அங்கு அபிஷேகநை வேத்யதி பாராதனைதிகள் முறையே விதிப்படி நடைபெற்றன.

அதன்பின் குஹபரசிவம் சூரியாஸ்தமயன மானவுடன்புற்கூறிய அலங்காரங்களோடு தேர்

மேற்கொண்டு, நிவர்த்திகள், பகல்வர்த்திகள், சுடர்கான்று இருளையோட்ட,சற்கரைக் காவடிகளுடன்வரப்பவனிபோந்து, சுத்திசெய்து வாழைகள் நாட்டித் தோரணகங்ணிரைத்துப் பூமாலைகள் தூக்கிப்பூரண கும்பங்கள் வைத்துத்திருவிளக்கேற்றி அலங்கரித்திருந்த நகரத்தார்கள் வசிக்கும் வீதிக்கு எழுந்தருளினர். அங்கு நகரத்தார்கள் பீதாம்பராதிகள்சமர்ப்பித்துக் கர்ப்பூராராத் திரிகம் பணி மாறுவித்துத் தரிசனஞ் செய்தார்கள்.

சுப்பிரமணியக்கடவுள் அவர்களுக்குத் திருவருள் பாலித்து அங்கு நின்றும்போந்து, தமதாலயத்தின் றெற்றியிலோவியத்துறையிற்கைபோய விசித்திரத்தொழிலாளர்களா லெத்திறமையினுஞ் சித்திரத்திறமை மிக நற் றிறமையெனநயந்து வியந்து மகிழ்ந்து புகழ்ந்து பாராட்டிச் சிராட்டும்படி யமைக்கப்பட்டதும், அதன் றெற்றியினூட்டிய நாற்கம்பத்திற் பூட்டிய நாநாவர்ணத்து வசங்கள் பூருவத்தும், யாமியத்துங், குடக்கினும், வடக்கினுமவற்றின் கோணங்களினும் நின்று வரும் ஜனக்குழாங்களை இங்கே வம்மினகள்! வம்மின்களென்றழைக்குமாறு போல வாகாயத்தானந்தித்தாடி யசையவும்;

அதில் நாட்டியிருக்கும் வாழைகள் நாமொரு பெண்ணின் பெயரைப் (அரம்பை) பெற்றிருத்தலாலதற் கேற்ற படி நிற்றல் வேண்டுமென்று நினைந்து நிற்றல் போலச் சிப்பிட்டுச் சிப்பிட்டு நாணிக் கோணிப் பூமியைப்பார்த்து நிற்கவும்; முத்துச்சரங்கள் போன்ற விரிந்த பாளை களையும், மரகத மணிகள் போன்ற பசுங்காய்களையும், பவளக்கொத்துப் போன்றபழங்களையுமுடையகமுகுகள் பெண்கள் தங்கள் கழுத்துகளுக்கு நம்மழகைக்கவர்ந்து கொள்வர் களென்றஞ்சிவந்தோதுங்கி நிரை நிரையாக நிற்பனபோல நிற்கவும்; பூகக்குலைகளும் செவ்விள நீர்த்தாமக்குலைகளுந்தொங்கவும்; விவிதவர்ண சுமனஸதாமங்கள் பலநிறமணி மாலைகள் நிகர்த்தசைந்தாடவும், மகரதோரணங்கள் விளங்கவும், ஸ்படிக தீபங்கள், சந்திரிகாதீபங்கள்; காசதீபங்கள், மின்சாரதீபங்கள் முதலிய தீபங்கள் சுடர்கான்றுதுலங்கவும், சாரதர்வடி வாகச்செய்த பாவைகள் பூதநிர்த்தம் செய்யவும், பெண்பாவைகளிற்சில புஷ்பமாலைகளையும் சிலசாமரைகளையுந் தாங்கி நிற்கவும் என்ணிலாவைகலெத்திறம் நோக்கினுஅங் கண்ணினுலடங்காதுன்னிற் கருத்தினுலடங்காதென்று சொல்லும்படி அலங்கரித்திருந்த பூங்காவனத்தின் கீழ்ச்சிறிது காலம்

நின்று, இரதம் விட்டங்கிறங்கி " ஊறில் வெய்யவர் யாருமொரோவழிச்சேற லெய்திச்செறிந்தெனவில் விடுமாறில் செஞ்சுடர் மாமணிப் பீட மேலேறிவைகி,, யருளினர்.

௰௯ உ சனிக்கிழமை தைப்பூசத்தன்று பகல் குமாரக்கடவுள் நகரத்தார்களும் பிறரும் செலுத்தும் சற்கரைக்காவடிகள் பாற்காவடிகள் முதலிய அபிஷேக நைவேத்திய பூஜோப சாரங்களை யேற்று, நகரத்தார்கள் "வேலுமயிலும், வேலுமயிலும், வேலுமயிலும்,, என்னும் மஹா மந்திர முழக்கத்தோடும் முகமலர்ச்சி காட்டி இன்னுரைபுகன்று மாகேசுரர்கட்கும் பிறர்க்கும் செய்யும் அன்னதானத்தைக் கடாக்ஷித்து அன்றிரவுதமதடியார் களுக்கு மயில்வாகனக்காட்சி கொடுத்தருளினர்.

௰அ உ ஞாயிற்றுக்கிழமை பகல் குமாரக்கடவுளுக்கு விசேஷ பூசைகளும், அன்னதானதிகளுஞ்செவ்வேநடைபெற்றன.

அன்று இரவு குமாரக்கடவுள் அற்புதரத்நாபரணாலங்கிருதராகிமுற் கூறியவை பவங்களுடன், சித்ர விசித்ர இரசித கேடகத்தின் மேற்

கொண்டு, ஆர்ச்சாரேட்டு மார்க்கமாகப் பவனி வந்து கடற்கரைப் பக்கத்திலுள்ள "ஜனவரித் திடல்" என்னும்வெளியில் வந்து நின்றருளினர். அக்கடலில் பாய்விரித்தோடுங் கப்பல்களும், அதைச் சேர்ந்த சிறு வள்ளங்களும், புகைப்கப்பல்களும், புகைவள்ளங்களும், பலவகைச் சிறிய தோணிகளும், தாங்கிச் செலுத்தும் பாதைகளும், வலித்துச் செலுத்தும் ஓடங்களும், உடுவினல் உந்திச்செலுத்துங்கை வள்ளங்களும் பலவகை நிறத்திபங்களோடு விளங்குங் காட்சிகண்கவர் வனப்பைக்கொடுத்தது,

அவ்விடத்தில் இந்தியா, ஜப்பான் முதலிய பல விடங்களினின்றும் வரவழைக்கப்பட்ட பூவாணம், பொரிவாணம், ஆகாசவாணம், சுழல்வாணம், தேர்வாணம், எலிவாணம், சர்ப்பவாணம், நக்ஷத்திரவாணம், கப்பல்வாணம் அக்ஷரவாணம், பலவகைச் சித்திரவாணங்கள், அவிட்டுவாணம், மத்தாப்பு முதலியவான வேடிக்கைகள் நடந்தன.

பின் குமாரக்கடவுள் அங்கு நின்றும் போந்து தமதாலயத்தை யடைந்து வீற்றிருந்தருளினர். அப்போது நகரத்தார்கள் சுவாமி சந்நிதா

னத்தில் நமஸ்கரித்துத் தாம் தாம் விரும்பிய விரும்பிய வரங்களைப் பெற்றுப் பெரு மகிழ்ச்சி யுற்றுகள்-இருநிற்க.

தைப்பூச மகிமை சிறிது கூறுகின்றும்

உலகத்திலே திசைகள் நான்குஉள்ளன. கோணங்கள் நான்கையுஞ்சேர்த்துத் திசைகள் எட்டென்பாரும்; மேல்கீழ்என்னு மிரண்டையுஞ் சேர்த்துப்பத்தென்பாருமுளர். இத்திசைகளுள், கிழக்கும் வடக்குமேசிறந்தன. இது பற்றியே சுபகாரியங்களைச் செய்வோர் கிழக்கு அல்லது வடக்கு முகமாக விருந்துசெய்து வருகின்றுர்கள். மற்றைத்திசைகள் சுபகாரியங்களுக்காகாவாம். எசுர்வேதம்* "கிழக்கும் வடக்கும் மேத்தியம் (சுத்தம்) தெற்கும் மேற்கும் அமேத்தியம் (அசுத்தம்) கிழக்குத் தேவர்களுக்குரியது, தெற்குப் பிதிர்ளுக்குரியது, மேற்கு மாநுடர்களுக்குரியது, வடக்கு ருத்ரஹாத்திக்குரியது,,என்று கூறிற்று. மாநுடர்கள், பிதிர்களுக்குரியமேற்குத் தெற்குத் திசைகளினும், தேவர்களுக்கும் ருத்ர

* வடமொழி எழுத்தில்லாமையால் வேத இருக்கு அச்சிடப்படவில்லை.

மூர்த்திக்கு மூரிய கிழக்கு வடக்குத்திசைகள் மிகச்சிறந்தன. சாமானிய தேவர்களுக்குரிய கிழக்குத் திசையினும், தேவாதி தேவமஹா தேவராகிய ருத்திர மூர்த்திக்குரிய வடக்குத்திசை மிக மிகச்சிறந்தது. இது நோக்கியே "இருந்து கமடாதனத்திலே வடபாலுநோக்கித்-திருந்தியிட வே கருமஞ்செய்,, "பூர்வதிசைநோக்கிப்புரியலு மாமற்றிரண்டு-மார்வமுறச் செய்கைவிதியன்று,, (சைவசமயநெறி,பொதுவிலக்கணம்.௬௧. ௬௨.)

பூருவதிசை உத்தரதிசையைப் போன்றவத் துணைச்சிறப்பின்றாதல் கருதியே "புரியலும்,, எனஇழிவுசிறப்பு உம்மைகொடுத்துக் கூறினர். இதுமட்டோபோககாமிகள்கிழக்குமுகமாகவும், மோக்ஷ காமிகள் வடக்கு முகமாகவு மிருந்து ஜபதவநியாஹுதிகள் செய்யும்படி சிவசாஸ்திரங் கள் கூறியது மிதனைவலியுறுத்தும்.

இதனல், கிழக்கிசையி லுதிக்குஞ் சூரியன் வடதிசையிற் சஞ்சரிக்கின்ற உத்தராயண கால மேமிகச்சிறந்தது. உத்தராயணகாலம் ஆறுமா சமும் சூரியன் விசேஷப்ரகாசப் பொலிவோடு விளங்குதலாலும், ஈசாநகுபேர வாயுதேவதிசா வாசத்தாலுமென்க தக்ஷிணாயனகாலமோவென்

னில், அத்துணைச் சிறப்பினையுடையதன்று. அந்த ஆறுமாசமும் சூரியன்மேகாதி உபாதிகளால் மலினப்பிரகாசத்தோடு விளங்குதலாலும்; சேர்ந்தார்க்கொல்லியாகிய அக்கினியமன் ராக்ஷத ரூபநிருதி திசாவாசத்தாலுமென்க.

இத்தகுவிசேஷச் சிறப்புவாய்ந்த உத்தராயணத்துள் தைமாசம் முதன்மாசமாதலாலும், தேவதினோதய காலமாதலாலும்; உதயகாலமே மற்றைக்காலங்களிலும் ஐபதியானுதி சத்கர்மங்களுக்கு இன்றியமையாச்சிறப்பினையுடையதென்று சாஸ்திரங்கள் கூறுதலாலும் அத்தைமாசமேசிறந்தது. மற்றைப்பதினொருமாசமும் சூரியசங்கிரமணமாகியும் இந்த மகரசங்கிரமணத்தையே உலகமெல்லாம் மிகப்பேணிக்கொண்டாடிக் குதுகலிக்கின்றமையுங்காண். மதுராபுரியிலே அரசாண்ட "அருகாதசெல்வத்து,, அபிஷேகபாண்டிய மகாராஜன் "மதுரேசனைவந்து வந்தித் தருகாதரத்தாற்கழிந்துள் வலமாகமீபூம்,, போது."செழியனும் பாண்டிநாடருந்திருவெய்திமே னல்லவீடெய்தக்கூடலம் பதிமேவியகுணங்குறி கடந்த வேடரமகொருசித்தராய்,, எழுந்தருளிக்கல்லானைக்குக்கரும் பருத்தியதிருவிளையாடல் நடத்தியருளியது மிந்நாளேயாம்.

இம்மகரமாசத்திலே வரும் புஷ்யநக்ஷத்திரமே தைப்பூசம் என்று சொல்லப்படும்.

இது எல்லையில்லாத விசேஷமுடைமை யாலன்றோ ஸ்ரீமந்நடேசப்பெருமான் பதஞ்சலிமுனிவரருந்தவத்திற்கிரங்கி எழுந்தருளிவந்து "உன் வேண்டுகோளின்படி தைமாசப் பூசநக்ஷத்திரத்தன்று நமது ஆநந்த நிருத்தத்தைத் தரிசிப்பிக்கின்றோம்,, என்று எடுத்தருளிச்செய்தார். "பூசை யங்கியற்றிக் கூத்தும் புந்திசெய் தரும்புலிக்கா லாசிலா முனியிருந்தான வனுடனமர்க நாமு-மோசை கொள்பூசம் பொன்னாளே றுதினம் பொருந்து முச்சி-தேசுறுநடநிகாணச்செய்து மென்றருளிச்செய்தான்,, (கோயிற்புராணம்-பதஞ்சலிச்சருக்கம் என) "தைகொள்பூசம்" என்பதற்கு ஸ்ரீலஸ்ரீ நாவலரவர்களால் (பிரசித்திபெற்றதைப்பூசம்) என்றுஉரை எழுதப்பெற்றதுங் காண்க.

தைப்பூசம் என்பது தைமாசத்தின்கண்வரும் பூசம் எனவிரியும். இது உருபும்பொருளுமுடன்றொக்க ஏழாம் வேற்றுமை. தை என்பது தைஷி என்னும் வடமொழியினின்று தோன்றியதற் பவம். தற்பவமாவது வடமொழியாகிய அதினின்று

யாதும் விகாரம் பெற்றுத்தமிழில் வந்து வழங்கும் வடசொல். தைஷி என்புழி ஷி என்பது கெட்டதே இங்கே விகாரமாகும். தைஷி என்பது திஷ்ய என்பதனடியாகப்பிறந்ததத்திதம். திஷ்ய சம்பந்தமுடையது தைஷி என்க. நிஷதசம்பந்தமுடையது நைஷதம் எனவருதலும் அறிக. திஷ்யம் என்பது பூசநக்ஷத்திரம். பூசநக்ஷத்திரம் பௌர்ணிமையோடு கூடிவரலாலே தைஷி எனப்பட்டது. தை என்னும் மாசப்பெயர் வடமொழி என்பது மாசி, பங்குனிமுதலிய மற்றை மாசப்பெயர்களெல்லாம் வடமொழிப்பெயராயிருத்தலானுந் துணியப்படும். [மாசிஎன்பதுமாகி என்பதன்திரிபு. மாகி என்பது மகநக்ஷத்திரத்தோடு கூடியபௌர்ணிமையையுடைய மாசம். பங்குனி என்பது பற்குனநக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணிமையையுடைய மாசம். பற்குனம்-உத்தரம்-சித்திரை என்பது சித்திரை நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணிமையையுடைமாசம். வைசாகி என்பது விசாகநக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணிமையையுடை யமாசம். இப்படியெ மற்றையமாசங்களையும் பொருள்செய்து கொள்க ]

தைஷி என்பதைத் தைஷ்யம் எனவுஞ் சிலர் கூறுவர். பூசம் என்பது புஷ்ய என்னும் வடசொல்லினின்று வந்ததற்பவம். "சந்திரன் மற்றைத்திதிகளினும் பார்க்க இராத்திரிமுழுவதும் ஔஷதாதிஸமஸ்த ஜீவோபகார சீதளதிவ்ய சுவேதப்ரகாசமாகவே விளங்கலால் பௌர்ணிமாசிறப்புற்றது,, என்னும் வாக்கையும் நோக்குக.

பரப்பிரமமாகிய சிவபெருமான் தம்மை ஆன்மாக்கள் வழிபட்டுய்யும் பொருட்டுச் சிவலிங்கம் முதலிய திருமேனிகள் கொண்டு எண்ணில்லாத தலங்களில் வீற்றிருந்தருளுகின்றார். அத்தலங்களுள், திருவிடைமருதூரே மிகச்சிறந்தது இது மதுரைச்சொக்கலிங்கப்பெருமானால் "எமையாமருச்சித்திருக்குந்தலம்,, என அருளிச்செயப்பெற்றது. மற்றைச்சிவஸ்தலங்களெல்லாந் தனக்குப் பரிவாரங்களாகக் கொண்டுதான் அங்கியாகிய நடுநாயகமணியாய் விளங்குகின்றது. இதுபற்றியே அங்குசாந்நித்யவாச சிவலிங்கமூர்த்தி மஹாலிங்கமூர்த்தியென்று போற்றப்படுகின்றார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார் இவர்களாலும், கருவூர்த்தேவர், பட்டினத்தடிகளாலும் பாடப்பெற்றது- "அந்த விடைமருதிலானந்தத் தேனிருக்

கும் போங்தைப்பரவிநாம் பூவல்லி கோய்யாமோ,, என்னுவாக்கையும் நோக்குக.

இத்திருவிடை மருதூரில் எழுந்தருளியிருக்கும்மஹாலிங்கப்பெருமானுக்குச்செய்யும்மகோற்சவம் மற்றெல்லாத் தலங்களினுமுள்ள எல்லா மூர்த்திகளுக்குஞ் சாருமென்னு முண்மையை நன்கறிந்த ரோமசமகா முனிவர் அத்திருவிழாச்செய தற்குரிய அத்தியற்புத, அத்தியுத்தம, அதிபரிசுத்த, அதிமங்கள தினமெதுவென்று சாஸ்திரங்களை ஆராயந்து இந்தத்தைபூசத்தினத்தையே உத்தமோத்தம சுபதினமெனக்கண்டு அத்திருவிழாவை நடத்தினர் (மருதவனபுராணம் பூசமகிமைச்சருக்கம்) "பூசத்துறையிற்புகுந்தாடி,, என்று திருவிளையாடற்புராணத்திற் பரஞ்சோதி முனிவரும்; "மாசறுசிறப்பின் வானவராடும் பூசத்தீர்த்தம் புரக்கும் போன்னி-யயிராவணத்துறையாடுமேப்ப,, என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவையிற் பட்டினத்தடிகளு மெடுத்தருளிச்செய்தார்கள். திரவிடோப நிஷத்துக்களிலும் இப்புஷ்யோற்சவம் கூறப்பட்டிருக்கின்றது என்பதையுஞ் சிறிதுகாட்டுகின்ளும். திருஞானசம்பந்த மூர்த்திநாயனர். பூம்பாவைத்திருப்பதிகம், "மைப்பூசுமோண்கண் மடநல்லார் மாமயிலைக், கைப்பூசுநீற்ருன் கபாலீச்சரமமர்ந்தா, னெய்ப்பூசுமோண்

புழுக்கனேரிழையார் கொண்டாடுந், தைப்பூசங்காணு தே போதியோ பூம்பாவாய்,, *திருவிடைமருதூர்* “வாசங்கமழ் மாமலர்ச் சோலையில்வண்டே தேசம்,, புகுந்தீண்டியோர் செம்மையுடைத்தாய்ப், பூசம்புகுந் தாடிப் பொலிந்தழகாய, வீசனுறைகின்ற விடைமரு தீதோ,, *திருநாவுகரசுநாயனர். திருக்குறுந்தொகை.* “பாசமொன்றிலராய்ப்பல பத்தர்கள், வாசநாண் மலர்கொண்டடிவைகலும், ஈசனெம் பெருமானிடை மருதினிற்.பூசநாம்புகுதும் புனலாடவே,, “மாசார்பாச மயக்கறுவித்தெனு, ணேசமாகிய நித்தமணாளனைப், பூசநீர்க்கடு வாய்க்கரைப்புத்தூ, ரீசனேயென வின் பமதாயிற்றே.,,

*இத்தைப்பூசம் தெய்வசம் பந்தவிசேஷ தினமே அன்றிக்கி ரீடதாரணஞ்செய்ய விசேஷதினமுமாம். எங்ஙனமெனின்-தொண்டை மண்டலாதிபதியாகிய சோமகாந்த மஹாராஜனுக்கு முடிசூட்டுதற்குரிய சுபநாளென்று சோதிசாஸ்திரங்களை நன்காராய்ந்து பிராமணர்கள் தெரித்தெடுத்து நியமித்த நந்நாளுமித்தைப் பூசமாதலினென்க. (பார்க்கவபுராணம்-பட்டாபிஷேகப்படலம்.*

கார்த்திகை நக்ஷத்திரம் குமாரக்கடவுளு க்கே உரியதாயினும், திருஅண்ணாமலை, திருவஞ் சைக்களம் முதலிய சிவக்ஷேத்திரங்களில் திருக் கார்த்திகைத் திருவிழாச் சிவபெருமானுக்கு மிக விசேஷமாக நடத்தப்படுவது போலவும்; சுக்கிர வாரம் சுப்பிரமணியக்கடவுளுக்குரியதே ஆயி னும் விநாயகக்கடவுள், உமாதேவியார், வரலக்ஷ்மீ முதலியவர்கட்குரியனவாகக் கொள்வது போ லவும், பங்குனி உத்தரம் சிவபெருமானுக்குரிய தே ஆயினும் குன்றக்குடி முதலிய விசேஷ சுப்பிரமணிய க்ஷேத்திரங்களில் விசேஷ உற்வம் நடத்துவது போலவும், சிவராத்திரி சிவபெருமா னுக்குரியதேயாயினும் விநாயகர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளுக்கும் அது உரியதாக நட த்துவது போலவும், தைப்பூசமும் சிவபெருமா னுக்கும் குமாரக்கடவுளுக்கும் உரியதேயாயினும் இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், பினங்கு, சை கோன், பர்மா முதலிய தேசங்களில் சுப்பிரமணி யக்கடவுளுக்கே பாற்காவடி, சற்கரைக்காவடி, பன்னீர்க்காவடி, சந்தனக்காவடி முதலியகா வடிகள் செலுத்துவதோடு மகோற்சவமும் நட த்திவருகின்றார்கள்.

குமாரதந்திரத்திலுள்ள மாசபூசாவிதியிலே "தைமாசத்தில் வருகின்ற பூசநக்ஷத்திரத்திலே (சுப்பிரமணியக்கடவுளுக்கு) தேனால் அபிஷேகஞ்செய்க (அது) எல்லாவியாதிகளை அழிப்பதும். வெற்றியைக்கொடுக்குங் காரணமுமாகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

சுபம்! சுபம்!! சுபம்!!!

வேலுமயிலுந்துணை.

